உ

சிவமயம்.



# இல்லற தர்மம்

ஸ்ரீலஸ்ரீ

சிவ சூரிய சுவாமிகள்,
திருநெல்வேலி டவுன்.

 [Annas 2.

உ

சிவமயம்.

# இல்லற தர்மம்.



ஸ்ரீலஸ்ரீ

சிவ சூரிய சுவாமிகள்,

திருநெல்வேலி டவுன்.



PRINTED BY
HOE & CO., AT THE 'PREMIER' PRESS,
STRINGER'S STREET, MADRAS.
1916.

விலை ] [ அணா 2.

# விஷய அட்டவணை.



இரண்டாம்பகுதி :—இல்லறதர்மம்—



---

# முகவுரை.

---

## * திருப்பணி.

நன் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கட னடியேனையுந் தாங்குதல்
என்கடன் பணி செய்து கிடப்பதே.

திருப்பணி யென்பது, "கோவில்வேலை" எனப்பொருள்படும். ஆயினும், தேவாலயங் களிற் சிலமானவை (பழுதானவை) களை, ஜீரணோத்தாரணம் (செவ்வையாக்குதல்) செய் வதையே குறிக்கும்.

---

* இப்புத்தகம் திருப்பணியை உத்தேசித்துப் பிரசுரிக்கப்பட்டாலும், அதற்கு மூலகாரண மான "இல்லறதர்ம" த்தைப்பற்றி சகலரு மறிந்துணரவேண்டுமென்று சுவாமிகள் திரு வுளங் கொண்டபடியால், திருப்பணியை முதற் பகுதி யாகவும், இல்லறதர்மத்தை

ஆலயம் கட்டுதலும், அதில் திருவுரு பிரதிஷ்டை செய்தலும், அதற்கு நித்திய நைமித்தியாதிகளை ஏற்படுத்தி நடத்துதலும் புண்ணியமாகும். எனினும், அதைவிடப் பெரும் புண்ணியமாயுள்ளவை, ஏற்கனவுள்ள ஆலயங்களிற் பழுதானவைகளைச் செப்பனிடுதலும், நித்தியபூஜை, திருவிழா, முதலியவைகள் குறைவாயுள்ள கோவில்களில் அவைகளை ஒழுங்குடன் நடைபெறச் செய்வித்தலுமாம்.

சிவபெருமான் சர்வவியாபகராய் எங்குமுள்ளாராயினும், ஆலயங்கள் பரிசுத்தமான ஸ்தல

---

* இரண்டாம் பகுதி யாகவும் தொகுத்திருக்கின்றேம். அன்றியும், அவைகளைச் சிறுவர் சிறமிகளும் எளிதாக வாசித்துணர வேண்டிச் சுலபமான செந்தமிழ் நடையில் எழுதப்பட்டிருக்கிறது. ஆகையால் இவ்வரிய சிறு புத்தகம் ஒவ்வொரு கிரஹத்திலும் இருந்தீரவேணுமாய் விரும்புகிறேம்.

மாகையால் அங்குவந்து பக்தி சிரத்தையுடன் வணங்குவோர்க்குப் பிரசன்னராகி கருணைபாலிப்ப தியல்பா யிருக்கிறது.

இக்காரணம் பற்றியே "ஆலயந்தொழுவது சாலவும் நன்று" என்ற முதுமொழியும் வழங்கி வருகின்றது. இது நிற்க.

ஆலயங்களிலே நடக்கும் திருப்பணிகள் அனந்தமாயினும், கற்களால் மதிலெழுப்புதல் தளம்போடுதல், மண்டபம், கர்ப்பக்கிரகம், இவைகளைக்கட்டுவித்தல், திருவுரு, விமானம் இவைகளைப் பிரதிஷ்டை செய்தல் ஆகிய இவையெல்லாம் சாஸ்வதத்திருப்பணிகளாம். ஆதலால் இவைகளை நடத்துவதும், நடத்துவார்க்கு இயன்ற உதவிகளைச் செய்வதும் நிகரற்ற புண்ணியமாம்.

இவ்வுண்மை புராணபூர்வமான நம்பிக்கையாய் மட்டுமில்லாமல் பிரத்தியக்ஷத்திலேயே மனிதர் ஒவ்வொருவரும் கண்டறியக்கூடியதாயு மிருக்கின்றன. அக்காரணம்பற்றியே

ஈயா உலோபிகளுங் கூட, கற்பணி நடத்து வதற்கேன்றல், தாராளமாய்ப் பொருளுதவு வதைச் சகஜமாய்க் காண்கிறோம்.

தவிற மற்ற ஜீவராசிகளைப்பார்க்கிலும், மனிதர்க்குப் பகுத்தறிவு என்னும் விசேஷ சக்தி வாய்ந்திருப்பதால் அவ்வறிவுகொண்டு இல்லறதருமத்தை நடத்தி வரவேண்டியது கடமையாகும்.

அங்ஙனமிருக்க மனிதரிற் சிலர் 'தருமம்' செய்வதில் பிரியமற்றவர்களாயும், ஒருசிலர் பிரியப்பட்டாலும் அதைக்கருத்துடன் செய் யாதவராயு மிருக்கக் காண்கிறோம். சிலரோ, மாடமாளிகை கூடகோபுரங்களில் வசித்தலும் மாடுண்டு, கன்றுண்டு, மக்களுண்டு என்று மகிழ்வதும், செல்வச்செருக்கினல் பாவதோ ஷங்களை ஆராயாமலும் மயங்கிக்கிடக்கின் றனர். அத்தகையார்க்கு, சத்சங்கமாவது, சத் விசாரணையாவது இருப்பதுங் காணேம், ஆனல் பணப்பிராப்தியால் பணமே சதமே

ன்றும், பணத்தால் சகலவற்றையும் வெல்லலா மென்றும் புத்திபடைத்தவர்க ளாய் "சிவ சிவா" யென்று சொல்வதற்குப் பதிலாக "பணம் பணம்" என்று புலம்பிக் காலங்கழிக்கின்றனர். அந்தோ! பரிதாபம்! பரிதாபம்!!

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண்டென்று மகிழ்வதெல்லாம் கேடுண்டெனும்படி கேட்டு விட்டோம்" என்றும்,

"பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லைப் பிறந்துமண்மே லிறக்கும்பொழுது கொடு போவதில்லை யிடைநடுவிற் குறிக்குமிச்செல் வஞ் சிவன்றந்ததென்று கொடுக்கறியா திறக் குங் குலாமருக் கென்சொல்வேன் கச்சி யேகம்பனே" என்றும் பட்டினத்தடிகள் சுவா னுபவமாய்த் திருவாய்மலர்ந்தருளியிருக்கின் றூர்கள்.

மேற்கூறிய பாடலிரண்டும் வீடுவீடாய் எவரும் பாடக்கூடியதாய் அப்பாடற்கேற்ப

உண்மையைத் தாங்களும் கண்டறியக்கூடிய தாயிருந்தும், மக்கள் பராமுகமா யிருக்கின்றனர்.

பட்டினத்தடிகள் ஒருகாலத்தில் நிகரற்ற குபேரனுயிருந்து, பிறகு காலகதியால் அவைகளை யெல்லாம் துறந்து, மெஞ்ஞானியாகி, பிற் காலத்திய நாமெல்லோரும் இன்றும் உய்யும் பொருட்டு பற்பல காலங்களிற் பாடிய அருட்பாக்களெல்லாம் எவ்வளவு கருத்துகளும் அருமையும் பெருமையும் அனுபவமும் வாய்ந்ததென்பதை அறிவுள்ளஒவ்வொரு மனிதரும் ஆராய்ந்து அறிந்து நடக்கவேண்டியது அத்யாவசியமாகும். முக்கியமாக செல்வந்தர்களுக்கு அப்பாடல்களினுடைய ஞாபகம் எப்பொழுது மிருந்து தீரவேண்டும்.

அப்படியானல் மட்டும் செல்வச்செருக்கில் மூழ்கிக்கெடாமல் ஹிதாஹிதமறிந்து செய்யத்தகுவனவெல்லாம் செய்தும் செய்யத் தகாதவற்றைக்களைந்தும், தானீட்டிய பொருள்

களெல்லாம் பிறருக்கும் பயன்படுமாறு செல விட்டும், இகத்திற் புகழும் பரத்தில் சாயுச்சிய பதவியும் எய்துவர்.

அநேகர் வறியர்களாயிருக்க, இடையிடையே ஒரு சிலரே குபேரஞ யிருக்கச்செய்யும் ஜெகதீசனின் திருவுளமெல்லாங் கூடி, ஒருவரைக்கண்டொருவர் உலகஞானம் பெறவும், ஒருவராலொருவர் இயன்ற உதவிகளைப் பெறவும், வறியரால் மாளாத பெருங்காரியங்களை வலியாரே முன்வந்து நடத்துவதற்கேயாம்.

ஆகையால் வறியோர்களிடத்திற் கருணையும், வறியரால் முடியாத எத்தனங்களில் சிரத்தையும் உதவியும் செய்திடுதலே பொருள்படைத்த வலியார் தலைமீதுள்ள பாரமாகும். ஆனதுபற்றி, அத்தகையார்க்கு ஒரு ஞாபகமூட்டுதலாக இச்சிறுபுத்தகத்தைவெளியிடுகின்றோம்.

1916 ம் ஞு
மேமீ 11உ. } நேல்லை மித்திரன்.



## முதற்பகுதி.

## திருப்பணி—ஸ்தலமஹிமை.

திருநெல்வேலியானது பாடல்பெற்ற புண்யஸ்தலங்களுளொன்று. இத்தலம், சாக்ஷாத் சிவபெருமான் கவுரியை மணம்புரிந்த கல்யாணப்பதி. சிவபெருமானும் பார்வதி தேவியாரும் பரிவுடன் சதா திருக்கோவில் கொண்டு விளங்கு முண்மைபற்றி, அனவரததான **நாதபுரம்**, என்றும் இப்பதியை யழைப்பர். திரிமூர்த்திகளும் ஆனந்தத்தோடு இப்பதியில் இருப்பதால் **திருமூர்த்திபுரம்** என்று மழைக்கப்படுகிறது. சகல வறங்களும் மிகுதியாகச் செய்யப்படுந் தலமாகையால், **தரணிசாரம்** எனவுங் கூறுவர்.

வேணுவனத்திலே எம்பெருமான் திருக்கோயில் கொண்டு விளங்குகின்றமையால் **வேணுவனக்ஷேத்திரம்** என்றும், பக்தன் வேண்ட வேண்ட வளர்ந்து தரிசனங்கொடுத்

தமையால், அம்முகூர்த்தத்தை வேண்ட வளர்ந்த மஹாலிங்க மெனவும் போற்றுவ துண்டு.

ஆகவே இப்பதியில் யாரேனும் பிறந்தாலும், தங்கினலும், ஒருகணம் வசித்தாலும், வேணுவன நாதரைத் தெரிசித்தாலும், இறந்தாலும் அவர்கள் நற்கதியை யடைவார்களென்பது ஸ்தலபுராணத்திலுள்ள முக்கிய விசேஷமாகும்.

---

## தீர்த்த மஹிமை.

---

### திருநெல்வேலித் தலபுராணத்திலே பொற்றமரையைப்பற்றி.

மங்கை பார்வதி வடிவுடையவண் மகிழ்
மணித் திருக்கோயில்
அங்கண் வைகு பொற்றுமரைத்தீர்த்தத்தி
லாடினேரெவரேனும்
தங்கள் சஞ்சித வினையெலாங் நீங்கியே
சாருநற்கதி சார்வார்
எங்கு மத்தடக் கறையினிற் றேவர்க
ளிடை விடாதிருப்பாரால்.—என்றும்,

**கருமாறியைப்பற்றி.**

மாக கங்கையினு முக்யமாங்
கருமாறி மேன்மை
மோகமாய்க் கேட்போர் பாவமுழுதும்
போய் முத்தி சேர்வார்.

என்றும் கூறப்பட்டிருக்கின்றன.

இவ்விரு பாக்களாலும், தீர்த்தத்தின்மேன்மை விளங்கும்.

ஆகவே, அவைகளில் அறிந்தும் அறியாதும், யாவராயினும் ஸ்நாநஞ்செய்து, சந்தி முதலியதைமுடித்து, ஜப தபங்கள் தருப்பணாதிகள் செய்து, ஸ்ரீ காந்திமதி யம்பிகையையும் ஸ்ரீ அனவரததான நாதரையும் தெரிசிப்பின் இகபர சுகங்களை யெய்து வாரென்பது திண்ணம்.

இதற்கத்தாட்சியாக, இன்றும் புருஷருள்ளும், பெண்டிருள்ளும் பற்பலர் விரதசீலமுடையராய் அத்தீர்த்தங்களில் அவரவர்கள் பிரார்த்தனை காலமளவும் ஸ்நாநாதிகள் செய்து வழிபட்டு சிந்தித மனோரத மெய்தி இன்புற்று வாழ்கின்றனர்.

குஷ்டம் முதலிய கர்ம வியாதிகளும் ஸ்நா நத்தால் மாறி விடுகின்ற தென்பது அனுபவ மாயிருக்கிறது.

ஆகவே இத்தீர்த்தக் கட்டங்களைப் பாது காத்தல் உத்தமோத்தம புண்யமாகும்.

---

## ஆலயத்தின் நிலைமை.

ஸ்ரீ காந்திமதியம்பிகை ஸமேத ஸ்ரீசுவாமி நெல்லையப்பர் ஆலயமானது பூர்வத்தில் இராஜ ராஜாக்களால் கட்டுவிக்கப்பட்டது. அக்காலத்தில் அவைகள் மிக வெளிதாகக் கட்டி முடித்ததாகச் சொல்லிக்கொள்ளவும் படுகிறது.

ஆயினும் இக்காலத்தில் அவ்வாறு கட்டி முடித்தல் முடியாதகாரியம். ஆனல் ஆலயங் கட்டி பந்நூற்றுண்டுகளாயினபடியால் இடை யிடையே சில பாகங்கள் ஜீரணமாயிருக்கின் றன.

ஆகையால் அவைகளைத் தெரிந்து, ஜீர ணோத்தாரணஞ் செய்யவேண்டியது சிவநே சச் செல்வர்களின் கடமையாகும்.

எதற்கு மொரு தூண்டுகோ லவசியமாதல் பற்றி, அவ்வாலயத்திலேயே பல்லாண்டு கர்ப் பூரப் பணிவிடைசெய்துவந்த **ஸ்ரீலஸ்ரீ சிவ சூரிய சுவாமிகள்** அத்தகைய நிலமானவை களைப் பக்தகோடிகளின் பொருளுதவியால் ஜீரணோத்தாரணஞ்செய்துமுடிக்கலாமென்ற நம்பிக்கை கொண்டனர்.

---

## சுவாமிகளுக்கு இத் திருப்பணியிற் கருத்துண்டான விதம்.

---

முதன் முதல் ஸ்ரீ காந்திமதியம்மன் சந்நி தியில் ஸ்ரீ நந்திகேஸ்வரர் சந்நிதியின் முன் கற்றளங்கள், மேடுபள்ளமாய், தரிசனார்த்தம் வருபவர்க ளிடறி விழுந் தன்மையாயிருந்

தைச் செவ்வைப் படுத்துவோமென்று பொருளுதவிக்காக உள்ளூரில் சில சிவபக்த சிகாமணிகளிடம் தெரியப்படுத்திஞர்கள். அவர்கள் அக்குறையை நேரிலறிந்தவர்களாகையால், அவரவர்களா லியன்ற பொருளுதவியைச் செய்ய அத்திருப்பணி செவ்வையாய் நடந்து முடிந்தது.

ஆனல் அப்பணி நடக்கும்போதே, அப்பணியை நடத்திய சிரத்தையையும், அப்பணியின் வாய்ப்பையுங் கண்டு சகலரும் ஆனந்தமுற்ருர்கள்.

அதுபோல் ஷை கோயிலில் பக்கப் பத்திபிரகாரங்களின் தளம் முதலிய முக்கிய திருப்பணிகளையும் எற்று நடத்தவேணுமாய் ஸ்தலத்திலுள்ள கனதனவான்களும் சிவனடியார்களும், ஆலய பரிபாலன கர்த்தர்களும் வேண்டிக்கொண்டனர்.

பிரஸ்தாபத் திருப்பணியில் சுவாமிகளுக்கியல்பாய் எழுந்த நோக்கத்தின் துவக்கம்,

நல்ல துவக்கமா யிருந்தபடியால் அப்பணி வலுத்து திருவருட் சம்மதமாக ஆலயம் பூராவு முள்ள ஜீரணங்களை உத்தாரணஞ்செய்யும் கைங்கரியம் சுவாமி அவர்களுக்கு லபித்தது.

சுவாமிகள் தற்சமையம் வயது தளர்ந்தவர்க ளாயிருந்தாலும் எடுத்தகருமத்தை இனிது நடத்தி முடிக்கவேண்டு மென்ற சிரத்தை யால், விரதம் பூண்டு, விடாமுயற்சியாய்ப் பல விடங்களும் போய்ப் பணங்களைச்சேகரித்து அனுப்பிக்கொண்டு வருகின்றார்கள்.

அத்தகைய சிரமத்திற்கு ஏனையோர் செய் யத்தகும் கைமாறு என்னவுண்டு? இவ்வுலக முள்ள காலமெல்லாம் மக்களாலனுபவிக்கப்ப டும் இன்பத்திற்குக் காரணமான இப்பெரும் புண்ணியம் என்றும் அழியாது நிலைத்து நிற்பதே கைமாறாகும்.

---

## சிவக்கமிட்டியாரவர்களின் ஆதரவு.

பிரஸ்தாபத் திருப்பணிகள் நடந்தேறுஞ் செலவுகள் எவ்வளவு ஏற்பட்டாலும், வெளி வசூல் பாதிபோக, மறுபாதியை திருநெல் வேலி ஸ்ரீ காந்திமதியம்பிகை ஸமேத ஸ்ரீ நெல்லையப்பார் தேவஸ்தானப்பண்டிலிருந்து கொடுக்கவேண்டு மென்று கனம் தர்மகர்த்தர் களவர்களுக்குக் கமிட்டியாரவர்கள் உத்திரவு பிறப்பித்திருக்கிறார்கள்.

அவ்வுத்தமோத்தம வுத்திரவின் பலத்தை வைத்தே, பிரஸ்தாபத் திருப்பணியை மிகப் பலமாக நடத்தத் துணியவும், துணிந்தபடி திருப்பணியும் விக்கினமின்றி நடந்தேறவு மாயிற்று.

இவ்விஷயத்தில் கனம் சிவக்கமிட்டி மெம் பர்கள், அவர்கள் கடமையென்று தோன்றி யதை மனப்பூர்வமாய்ச் செய்துள்ளார்கள்.

அன்றியும் சமயம் நேர்ந்தபோதெல்லாம் நடந்துவருந் திருப்பணிகளைக் கண்காணித்து, சீர்திருத்தங்களை எடுத்துக்காட்டியும், இன்னும் பலவகையிலும் ஊக்குவித்தும் வருகின்றார்கள்.

இப்பெரும்புண்ணியகாரியத்தில், அவர்கள் இவ்வளவுதூரம் சிரத்தை வஹியாத வரையில் திருப்பணி இவ்வளவுதூரம் நடந்தேறியிருக்க மாட்டாது.

---

## தர்மகர்த்தர்களின் ஆதரவும், மேற்பார்வையும்.

கனம் தர்மகர்த்தர்கள் அவர்களும் காலாகால மதிந்து பணம் முட்டுப்பட்டு அதனால் வேலை அட்டிப்பட்ட காலங்களிலெல்லாம், அவைகள் சரியாய்நடந்தேறிவரும்பொருட்டு பணவுதவி புரிந்து வருகிறார்கள். அம்மட்டுமல்ல. இத் திருப்பணி வேலைகளைத் தினப்படி நேரிற் பார்வையிட்டு விரைவில் நடந்தேறும்படி

எச்சரிக்கையுஞ் செய்து வருகின்றார்கள். அவ்வாறு அவர்கள் விசேஷ சிரத்தை வஹித்திருப்பது யாவரும் மெச்சத்தக்கதே யாகும்.

---

## நாட்டுக்கோட்டை நகரத்தாரின் ஆதரவு.

சிவனேசச்செல்வர்களாகிய நாட்டுக்கோட்டை வைசிய குலத்தார்கள், எப்பொழுதுந் தர்மகுணசீலராய் விளங்குகின்றாரென்பதும், முக்கியமாகப்பாடல்பெற்ற ஸ்தலங்களிலுள்ள ஆலயங்களைப் பரிபாலித்தல், அவற்றிற் சில மானவைகளை ஜீரணோத்தாரணஞ் செய்தல், அவைகளுக்கு நித்திய நைமித்தியாதிகளை யேற்படுத்தி அவைகளை ஒழுங்காய் நடத்தி வரல், இன்னும் அத்தலங்களிலே, பசுமடம் என்ன, நந்தவனம் என்ன, வேத அத்தியன பாடசாலை என்ன, அன்னதானச் சத்திரம் என்ன, தண்ணீர்ப்பந்தல் என்ன இப்படிப்

பற்பல உத்தம தர்மஸ்தாபனங்களை ஏற்படுத்திப் பரிபாலித்து வருகின்றனர்.

ஆதலால், இவர்களும் இப்பெருந்திருப்பணியிற் பங்குபெற்றவர்களாய், விசேஷ பொருளுதவிகளை ஆரம்பமுதற் செய்தும், பணியை நேரிற் பார்வையிட்டும், குறையும் பூர்த்தியாவதற்கு வேண்டும் சகல ஒத்தாசைகளும் செய்து வருகின்றார்கள்.

வெளிவசூல் பணங்களிற் பெரும்பான்மை அப்புண்ணியசீலர்களுடையதே யாகும். இத்தகைய சத்விஷயங்களில் இவர்களீட்டியபணங்கள்போய்ச் சேர்வதை நோக்க இவ்வகுப்பாரனைவரும், “ பூர்வத்திற் செய்தபுண்ணியத்தின் பலனாக அப்புண்ணியமெலாந் திரண்டொரு வகுப்பா யவதரித்தார்களோ ” வென வுலகம் புகழ்கின்றது.

---

# இதுவரை நடந்த திருப்பணிகளும் அவற்றின் செலவும்.

இதுவரையிலும், ஸ்ரீ அம்பாள் கோயிலில் கற்பகிரஹம், அர்த்தமண்டபம், மஹாமண்டபங் தவிர, ஸ்ரீ விநாயகர் ஸ்ரீ சுப்பிரமணியர் பத்தியும், பள்ளியறை முகப்புப்பத்தியும், உட்பிரகாரமும், அம்பாள் சன்னதியில் ஊஞ்சல் மண்டபத்திற்கு மேல் பாகமும், யாகசாலைக்குத் தென்பாகமும் ஆயிரக்கால் மண்டபத்துக்கு வடபாகமுமாயுள்ள இடம் பூராவுக்கும் கருங்கல் தளவரிசைகள் பரவி முடிந்திருக்கின்றன.

இதன்னியில் ஷை கோயிலின் உள்ளே வடக்குப்பிரகாரத்தில் ஈசானியத்திலுள்ள ஸ்ரீ ஆருமுகநயினரின் கர்ப்பக்கிரஹ வேலை நடந்துகொண்டிருக்கிறது.

ஷை திருப்பணிக்காக ஆதியில் உள்ளூரில் வீடுகள்தோறும் கலசம்போட்டு அரிசிவசூல் செய்யப்பட்டு வந்திருக்கிறது.

இவற்றிற்கு இதுவரை அதாவது 1087-ம்ளு முதல் 1090-ம்ளு ஆடிமீ வரையில் ரூ 35,406-க்கு மேல் வரவு செலவாயிருக்கின்றன.

அவை, வரவுக்கும் செலவுக்கும் விபரக்கணக்குகள் ஆண்டுகள் தோறும் வெளிப்படுத்தப்பட்டு வருகிறது. அவைகள் பார்வைக்கும் கொடுக்கப்பட்டு வருகிறது. தர்மகுணசீலர்கள் சுவாமிகளுக்கு எழுதித்தருவித்துக் கொள்ளலாம்.

---

## இனிமுடியவேண்டியவைகளும் அவற்றின் உத்தேசமும்.

இனி நடக்கவேண்டிய திருப்பணிகளாவன ஸ்ரீ அம்பாள் கோயில் வெளிப்பிரகாரங்களும்

ஆயிரக்கால்மண்டபமும், சங்கிலிமண்டபமும், கருமாறித்தீர்த்தக்குளமும், பொற்றாமரைத் தீர்த்தக்குளமும், பொற்றாமரை வெளிப்பிரகாரமும், கட்டிமுடிக்கவேண்டிய பாக்கிகளாயிருக்கின்றன.

கருமாறி, பொற்றாமரை ஆகிய இருதீர்த்தக்கட்டங்களும், அவற்றைச் சுற்றி யுள்ள படித்துறைகளும் மிகவும் ஜீரணித்துப்போயிருப்பதால்அவைகளையும் பொற்றாமரையின் மத்தி மண்டபத்தையும் அவசியம் மதுரையிற் கட்டியிருப்பதுபோலத் ஜீரணோத்தாரணஞ்செய்யவேண்டியதும், மேல்மண்டபங்களை யதற்குத்தக்கபடி நாலுவசமும் எழுப்பிக் கட்டவேண்டியதும் அத்தியாவசியமா யிருக்கின்றன.

இவற்றிற்கெல்லாம் குறைந்த பக்ஷம் ரூ 2,00,000 இரண்டுலெட்சம் ரூபாய் வரை செல்லுமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

---

# திருப்பணி நடத்துவதின் பிரயாசைகள்.

பொருள்மிகப்படைத்தோர், கையிற்பொருளை ஏராளமாய் வைத்துக்கொண்டு துவங்கும் முயற்சிகளே, விரைவில் முடிவதில்லை.

பிரஸ்தாபத் திருப்பணியோ லட்சக்கணக்கான பொருட்செலவில் முடியவேண்டியதாகவும் கொடுப்பாரிடம் போயலைந்து அவர்கள் சமையஃமறிந்து பெருளுதவிபெற்று நடத்த வேண்டியதாயு மிருக்கின்றது.

வசூலாவதும், நடக்கும் வேலைக்குக்கூடப் போதிய வளவாயில்லை. வேலை நடத்துமிட மிருந்து "பணம் பணம்" என்று தினப்படி கடிதம் வந்தவண்ணமா யிருக்கிறது.

பணம் எவ்வளவுக்கெவ்வளவு செழிப்பாயும் விரைவாயும் கிடைக்குமோ, அவ்வளவுக்கவ்வளவு எடுத்த தருமம் எவ்வித விக்கினமுமின்றி யினிதேமுடியுமென்பது நிச்சயம்.

பணம் வசூல்செய்தனுப்புவதில் மிகக்கஷ்டமும், அதிகத் தர்மதமு முண்டானாலும், வேலைகள் மிகவும் தீவிரமாயும், சிறப்பாயும் நடந்தேறிவருவது மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது.

---

## பிரார்த்தனை.

சிவநேசச் செல்வர்களே !

ஸ்ரீலஸ்ரீ சிவசூரிய சுவாமிகளுடைய நிகரற்ற முயற்சிக்கும், திருப்பணிக்கும், சிவநேசர்களாகிய நாம் செய்யும் கைம்மாறு, அவர்கள் எடுத்த பணி நிறைவேறுவதற்கு வேண்டும் பொருளுதவிகளைத் தாராளமாய்செய்து வருவதேயாம். சில புண்ணியவான்கள் விரும்புகிறபடி, அவர்களுடைய நாமதேயம், உதவியின் பெருமானம் இவைகளைக் கல்களில் வரைந்து பரவவேண்டுமென்று விரும்பினால், அவ்வாறுஞ் செய்யப்படும்.

ஒன்றேசெய், ஒன்றும் நன்றேசெய், நன்றும் இன்றேசெய்—என்ற முதுமொழிப்படி நாளை நமன் நாளான படியால், செய்வதை மன முவந்து இன்றே செய்திடுமாறு தங்கள் பாதாரவிந்தங்களைப் பிடித்துப் பிரார்த்திக்கிறேன்.

அன்பரடிப்பொடி,
நெல்லை மித்திரன்.



உ

கணபதி துணை.



# விநாயகர் அகவல்.

---

## சுலோகம்.

மூஷிகவாகன மோதஹ ஹஸ்த
சாமரகர்ன விளம்பிதசூத்ர
வாமனரூப மஹேஸ்வரபுத்ர
விக்நவிநாயக பாதநமஸ்தே.

---

சீதக்களபச் செந்தாமரைப்பூம்
பாதச்சிலம்பு பலவிசைபாடப்
பொன்னரைஞாணும் பூந்துகிலாடையும்
வன்னமருங்கில் வளர்தெளகெறிப்பப்
பேழைவயிறும் பெரும்பாரக் கோடும்
வேழமுகமும் விளங்குசிந்தூரமும்

ஐந்துகரமு மங்குசபாசமும்
நெஞ்சிற்குடிகொண்ட நீலமேனியும்
நான்றவாயும் நாலிருபுயமும்
மூன்றுகண்ணும் மும்மதச்சுவடும்
இரண்டுசெவியு மிலங்குபொன்முடியுந்
திரண்டமுப்புரிநூல் திகளொளிமார்பும்
அற்புதநின்ற கற்பகக்களிறே
முப்பழநுகரும் மூஷிகவாகன
இப்பொழுதென்னை யாட்கொள வேண்டித்
தாயாயெனக்குத் தானெழுந்தருளி
மாயாப்பிறவி மயக்கமறுத்துத்
திருந்தியமுதலைந் தெழுத்துந்தெளிவாய்ப்
பொருந்தவே வந்தெ னுளந்தனிற்புகுந்து
குருவடிவாகிக் குவலயந்தன்னில்
திருவடிவைத்துத் திறமிதுபொருளென
வாடாவகைதான் மகிழ்ந்தெனக்கருளிக்
கோடாயுதத்தாற் கொடுவினைகளைந்தே
உவட்டா உபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாதஞானத் தெளிவையுங்காட்டி
ஐம்புலன்றன்னை யடக்குமுபாயம்

இன்புறுகருணையி னினிதெனக்கருளிக்
கருவிகளொடுங்குங் கருத்தினையருவித்
திருவினைதன்னை யறுத்திருள் கடிந்து
தலமொரு நான்குந் தந்தெனக்கருளி
மலமொருமூன்றின் மயக்கமறுத்தே
ஒன்பதுவாயி லொருமந் திரத்தால்
ஐம்புலக்கதவை யடைப்பதுங் காட்டி
ஆறாதாரத் தங்குச நிலையும்
பேறநிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடைபிங்கலையி னெழுத்தறிவித்துக்
கடையிற் சுழுமுனைக் கபாலமுங்காட்டி
மூன்றுமண்டலத்தின் முட்டியதூணின்
நான்றெழுபாம்பி னாவிலுணர்த்திக்
குண்டலி யதனிற் கூடியவசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலாதாரத்தின் மூண்டெழுகனலைக்
காலாலெழுப்புங் கருத்தறிவித்தே
அமுதநிலையு மாதித்தனியக்கமுங்
குமுதசகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக்கரத்தி னீரெட்டு நிலையும்

உடற்சக்கரத்தி னுறுப்பையுங் காட்டிச்
சண்முகதூலமுஞ் சதுர்முகசூக்கமும்
எண்முகமாக வினிதெனக் கருளிப்
புரியட்டகாயம் புலப்பட வெனக்குத்
தெரியெட்டுநிலையும் தெரிசனப்படுத்திக்
கருத்தினிற் கபாலவாயில் காட்டி
இருத்திமுத்தி யினிதெனக் கருளி
என்னையறிவித் தெனக்கருள் செய்து
முன்னைவினையின் முதலைக்களைந்து
வாக்குமனமு மில்லாமனோலயந்
தேக்கியே யென்றன் சிந்தைதெளிவித்
திருள்வெளியிரண்டுக் கொன்றிட மென்ன
அருடருமானந்தத் தழுத்தி யென் செவியில்
எல்லையில்லா வானந்த மளித்
தல்லல்களைந்தே அருள்வழிகாட்டிச்
சத்தத்தினுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தினுள்ளே சிவலிங்கங் காட்டி
அணுவுக்கணுவா யப்பாலுக்கப்பாலாய்க்
கணுமுற்றிநின்ற கரும்புள்ளே காட்டி
வேடமுநீறும் விளங்க நிறுத்திக்

கூடுமெய்த்தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக்கரத்தி னரும்பொருடன்னை
நெஞ்சக்கருத்தி னிலையறிவித்துத்
தத்துவநிலையைத் தந்தெனை யாண்ட
வித்தகவிநாயக விரைகழல் சரணே.

விநாயகர் அகவல் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---



இரண்டாம் பகுதி—இல்லற தர்மம்.

௨

## கடவுள் நிலை.

கருணாநிதியாகிய ஜெகதீசன், அங்கிங் கெனாதபடி சர்வ வியாபகராயிருக்கிறாரென்ப துண்மையாயினும், ஆலயங்கள், பரிசுத்த ஸ்தலங்கள், மெய்யடியார்கள் இவ்விடங்களில் மாத்திரம் தயிரில் நெய் போல விளங்கி யும், மற்றை யிடங்களெல்லாவற்றினும், பாலில் நெய்போல விளங்காதும் நிற்பர்.

---

## கடவுள் வழிபாடு.

கடவுளை, மனசினாலே தியானித்தலும் வாக்கினாலே துதித்தலும், கைகளினாலே பூசித்தலும், கால்களினாலே வலம் வருதலும், தலையினாலே வணங்குதலும், செவிகளினாலே

அவருடைய புகழைக் கேட்டலும், கண்களி னாலே அவருடைய திருமேனியைத் தரிசித் தலும், வழிபடு முறையாம்.

அன்பில்லாத வழிபாடு உயிரில்லாத உட ம்புபோலாம். கடவுளிடத்தே மெய்யான பக்தியுடைமைக்கு அடையாளங்களாவன:— அவரிடத்திலே தான் அன்றன்று தப்பித் தவறிச் செய்த குற்றங்களை யெல்லாம் ஆரா ய்ந்து அறிவித்தலும், அதற்காக கண்ணீர்வி ட்டுக் கதறுதலும், இனியும் அத்தகைய தவ றுதல் நேருவண்ணம் சர்வ ஜாக்கிரதையாய் நடந்து கொள்வதாய் விண்ணப்பித்தலும், விண்ணப்பித்தவாறு நடந்துவர மிகப்பிரயா சை யெடுத்துக்கொள்ளலுமாம். இன்னும், அவருடைய உண்மையை நினைக்குந்தோ றும், கேட்குந்தோறும், காணுந்தோறும், தன்வச மழிதலும், மயிர்க் கால்கள்தோறும் திவலையுண்டாகப் பூளகங் கொள்ளலும், ஆன ந்தவருவி பொழிதலும், விம்மலும், நாத் தழுதழுத்தலும், உரைதமொறலும், தன்

னைமறந்து ஆனந்தக் கூத்தாடலும், அவ ரால் விரும்பப் படுபவைகளையெல்லாம் செய் தலும், வெறுக்கப்படுபவைகளை யெல்லாஞ் செய்யாதொழிதலும், அவருடைய மெய்யடி யார்களைக் காணுந்தோறுங் கூசாது வணங்க லும் பிறவுமாம்.

---

## கடவுளை முன்னிட்டே நடத்தல்.

நாம் நினைக்கும், எதிர்பார்க்கும், துவக்கும் எக்காரியங்களையும், சர்வேஸ்வரனாகிய கட வுளை முன்னிட்டு, நம்மையும், நம் எத்தனங்க ளையும் அவருக்கு ஒப்புக்கொடுத்து, அவரை வஞ்சியாது நடப்போமானால் கடவுளே முந் நின்று அக்காரியத்தை எவ்வித விக்கினமு மின்றி சுலபமாய் நடைபெறச் செய்கிறார். ஆகையால் மக்கள் அவரை நம்பி நன்மை யான காரியங்களை யெல்லாம் செய்து வர வேண்டும்.

---

# ஜீவ காருண்யம்.

உயிர்களெல்லாம் கடவுளுக்குத் திருமேனி கள். அவ்வுயிர்களின் நிலைக்களமாகிய உடம்பு களெல்லாம் கடவுளுக்கு ஆலயங்கள். ஆத லால் கடவுளிடத்திலே மெய்யன்புடையவர் கள், அக்கடவுளோடு உயிர்களுக்கு உளதா கிய தொடர்புபற்றி, அவ்வுயிர்களிடத்தும், (அதாவது மனிதர் யாராயிருப்பினும், அவர் களிடத்தே ஜாதி மதபேதங்களைக் காட்டாது அருமையாய் நடத்தலும்; மிருகம், பக்ஷி, ஊர்வன, நீர்வாழ்வன முதலியவைகளை தன் னிலும் தாழ்ந்த படைப்புத்தானே யென்று அவைகளை வதையாதிருத்தலும்) அன்புடை யவர்களாகவே விளங்குவார்கள். பிறவுயிர் களிடத்து அன்பில்லாத பொழுது, கடவுளி டத்தில் பக்தியுள்ளவர்கள்போல் நினைப்பதும் நடப்பதும், கேவலம் நடிப்பேயன்றி உண் மையான பக்தியாகமாட்டாது. பிற வுயிர்க

ளிடத்தே இரக்கமில்லாத மனிதன் தம்முயி ருக்கும் உறுதி செய்யமுடியாது. அவர் தம க்குத்தாமே வஞ்சகர். கடவுளின் கருணை அத் தகையாருக்கு உண்மையிலுண்டாவ தில்லை.

---

## புலாலுண்ணல்.

மாமிசங்களைச் சமைத்துண்ணல் மஹா இழிவானது. மாமிசமுட்கொள்ளும் வகுப்பி னரும், சாதம், பால், தயிர், ஊறுகாய் முத லியவைகளில் ஒரு ஈ எறும்பு முதலிய சிற்று யிர்கள் தவறிவிழுந்திருந்தாலும், அவைகளை யப்படியே யுட்கொள்வதில்லை. அப்படிக் கிருந்தும் மாமிசத்தைப் பக்குவப்படுத்தி யுட் கொள்வது பழக்கத்தாலன்றி வேறல்ல. அநே கர்க்கு அதுசெய்யத்தகாத தென்று தெரிந் தும் பழக்கவாசனையாக (நிறுத்தினால் சரீர அசௌக்கியமுண்டாகிறதாம்) விடாது அநுப

வித்து வருகின்றனர். அது தவறு. தன்னால் நிறுத்தமுடியவில்லையானால், தன் மக்கள், முதலிய பின்சந்ததியார்களை யாவது அப்ப ழக்க வழக்கங்களுக்குத் தப்பி வாழச்செய்ய வேண்டும். அப்படிச் செய்யின் காலக்கிரமத் தில் தங்களையும் அப்பிசாசு விட்டொழியும். "ஆட்டைக்கடித்தான் மாட்டைக் கடித்தான் மனிதனைக் கடித்தான்" என்பது ஒரு பழ மொழி. ஆகையால் புலாலுண்ணும் பழக்கமா னது, மனிதரைக் கொல்லவும் ஒருகாலத்திற் றூண்டிவிடும். ஆகையால் அப்பழக்கம் மஹா பாதகமானது.

---

## குடி.

கள், சாராயம், பீர், பிராந்தி, ஜின், ஒயின் அபின், கஞ்சா, முதலியவைகளும் சுருட்டு, பீடி, சிகெரட்டு முதலியவைகளும் குடிவஸ்து க்களாகும். இவைகளிற் பெரும்பான்மை மிக வும் லாகிரி யுள்ளவை. அவைகள் குடித்த

நிமிஷத்தில் உத்ஸாகத்தை மூட்டுவது போல மூட்டி, அவ்வளவுக் கவ்வளவு சில நிமிஷங்களில் நரம்புகளுக்குத் தளர்ச்சியையும், புத்தி சுவாதீன மின்மையாயும் விளை விப்பனவாயிருக்கின்றன. சிறுபான்மை விசேஷ மயக்கமில்லாதிருப்பினும், குடியில்லாமலிருக்க முடியாத மயக்கத்தைத் தருவனவாயும், அதனுல் உதடு, வாய், ஈரல், குடல் இவைகளை வேகவைத்து, காசம் முதலிய பல நோய்களை விளைவிப்பனவாயிருக்கின்றன. ஆக இருவிதக்குடிகளும், மனிதனின் ஆரோக்கியத்தையும், செல்வத்தையும் அழித்து, மானமும் மதிப்புங்கெடச் செய்து, சிலவருஷங்களில் சாமான்யருங் கண்டு நகைக்கும் படியான அவ்வளவு கேவல ஸ்திதிக்குக் கொண்டுவந்து விடுகின்றன. மேலும் அநாசாரமுமாயிருக்கிறது. ஆகையால் குடிக்கிறவன் குல குருவாயிருந்தாலும் அவனுக்கு விலகி நடக்க வேண்டும்.

---

## வியபிசாரம்.

இது சகல கேட்டிற்கும் வித்தாயிருக்கிறது. "கண்ணே கோடிபுண்யமுனக்குப் பெண்ணைப்பாராதே" யென்றபடி மனைவி தவிர, ஏனைய ஸ்திரிகளைக் கண்ணுற் பார்ப்பதே வியபிசார தோஷத்துக்கு வித்தாயிருக்கிறது. ஆகையால் மனிதர் தன் மனைவியையுங் கூட அடிக்கடி காண்பதும், அவர்களோடு மனோவுல்லாசப் பேச்சுகளைப் பேசுவதுந் தீங்காம். வீதியிற் செல்லும் ஒரு பெண்ணை ஒருவன் பார்க்காமலிருக்கலாம். பார்த்தாலோ, அவன் சற்று இழந்த மதியுடையவனுயின், அவளைக்கூட நினைக்கிருன். அவள்யாரோ வெனத் திகைக்கிருன். விசாரிக்கிருன். ஒரு சமயம் அவள் உத்தம குலஸ்திரியாகவே யிருத்தலுங் கூடும். அப்படியானல் அது மஹா பாதகமும், பாவமுமாகிறது. பொதுமகளா யிருந்தாலோ அவளைத் தேடித்திரிந்து, பணங்களை வாரியிறைத்துப் புண்களை வாங்

கிக்கொண்டு அவதிப்படுவதே தலைவிதியாய் விடுகிறது. "கூத்தி தருணியளக்கினும் அக்குடிநாசம்" என்று ஒரு கர்நாடக பழமொழியுண்டு. அதாவது இவன் தாசி வேசிகளுக்கு வாரியிறைத்தால்மட்டும் கேடுண்டாகுமென்பதல்லவென்றும், தாசிவேசிகளே பணங்கொடுத்து ஒருவனைத் தன் வீட்டிற்கு சதா வந்து போகும்படி செய்வதா யிருந்தாலுங்கூட அவன் கெட்டுப்போவான் என்பதாம். இன்னும் " விந்துவிட்டாயோ நொந்து கெட்டாயோ" என்றும், போதம், தனம், கல்வி, பொன்றவருங்காலம் மாதர்மேல் வைப்பர் மனம்" என்றும் அனந்தம் பழமொழிகளிருப்பதோடு, அநுபவத்தினாலும், அவ்வுண்மையை யறிகிறோமாகையால், பகுத்தறிவுடைய மனிதராகிய நாம் தன்தார புருஷராய் ஜீவியஞ்செய்தலே தகுதி.

---

## கடன்.

கடன் படல் மஹா இழிவானது. கடன் பட்டவன் கடன் கொடுத்தவனுக்கு விலைபோ லாய்விடுகிறான். கடன் கொடுத்தவன் கடன் பட்டவனை தானுத்தேசிக்கிற எத்தன ங்களிலெல்லாம் அவனை எவல் கொள்ளலா மென்று நினைக்கிறான். நினைத்து நடத்த வுஞ் செய்கிறான். ஒவ்வொரு மனிதனும் சுயமதிப்புடையவனுயிருந்தாலும், கடன் படுந் தன்மையால், தன் யோக்கியதையை அநேக ஸந்தற்பங்களில் இழந்து விடவேண் டியதாயிருக்கிறது. ஆகையால் அது கேவலந் தான். வியாபாரத்தை முன்னிட்டு கடன் படுவது சகஜமாயும் அது கேவலமல்ல வென் றும் கருதப்படுகிறது. ஆயினும் சொந்த முத லே வைத்து வியாபாரம் நடத்துவோருக்கு விசேஷ மதிப்பிருக்கக் காண்கிறோம். வியா பாரத்தை யுத்தேசித்துக் கடன்பட்டாலும், அது தன் தகுதிக்கு எவ்வளவோ சிறுமடங்

கான தொகையாயும், அக்கடனை தீர்க்கும் கவலை இராப்பகலாய் அவனுக்கு இருந்து தீர வேண்டியது மவசியமாகும். **கடன்வாங்கிக் கடன் கொடுத்தவனுங்கெட்டான், மாமேறிக் கைவிட்டவனுங் கெட்டான்** யென்ற பழமொழி யொன்றுண்டு. ஆகையால் கடனில்லாத கூழ் கால்வயிறுண்டாற் போதுமென்று மனிதர் சர்வஜாக்கிரதையுடன் காலந்தள்ளுவது மேல்.

---

## கல்வி.

காலம் மாறிக்கொண்டே வருகிறது. நவீன நாகரீகங்களும் தோன்றிக்கொண்டே வருகின்றன. ஆகவே மனிதராகிய நமக்கு கல்வியபிவிர்த்தி மஹா அவசியமாகும். புருஷர்களுக்கு மட்டுந் தானென்றல்ல, பெண்களையும் நன்ருய் கல்விபயில விட்டுப் பயிற்ற வேண்டும். பெண்களை வாசிக்க வைத்தால் கேடுகள் விளையுமென்பது புராதனக்கதை.

அறைகுறையாய்ப் படிக்கவைத்து அசங்கியமான பாடல்கள், நாவல்களைப்படிக்க விடுதல், தற்கால கூத்துகளைப் பார்வையிடச்செய்தல் ஆகிய யிவைகளெல்லாங் கூடி அவர்களையும், அவர்களிருக்கவெண்டிய நியம நெறிகளையுங் கெடுக்கின்றதென்பதுண்மைதான். ஆகையால், தாய்மார்கள் கற்றறிந்தவர்களாயிருந்து,தன் பெண் மக்களை கல்வியிலும், ஒழுக்கத்திலும், வீட்டு வேலைகளிலும், மேம்படச்செய்தால், அவர்கள் பிறந்த விடத்திற்கும் புகுந்த விடத்திற்கும் மிக உதவியாயும் நற்கீர்த்தியை யுண்டுபண்ணுகிறவர்களாயுமாவார்கள். ஆகையால் ஒவ்வொருவரும் தம் மக்களை நல்ல புஸ்தகங்களை வாசிக்கச்செய்தலும் சன்மார்க்கமாயும், சத்ஸங்கமாயும், நடந்து வரக்கண்காணித்தும் வரவேண்டியது அத்தியாவசியமாகும். புருஷர் கல்வியிற் தேற்சிபெற்று விளங்குவதும், மனைவிமார் கல்லா மூடராய், கற்றும் போதிய அறிவில்லாதவராயிருப்பதும், இரண்டு குதிரைகள் பூட்டக்

கூடிய வண்டியில் ஒரு குதிரையும், மற்றொன்று எருமையும் பூட்டுவதை யொக்கவிருக்கும். பெண்களுக்கு ஞானக்கண் திறக்கப்படவேண்டியது மஹா அவசியமேயாகும். பெண்களுக்குப் போதிய கல்வி கொடுத்துப் பார்த்தால், அவர்களுக்கு, ஆடையாபரணாதிகளிலுள்ள பிராந்தி யொழிந்து, கணவனின் குடும்ப வரவு செலவுகளில் மிகக்கருத்துடையராய், அக்குடும்ப வருவாய்க்குத் தக்க திட்டவட்டத்துடன் கிரஹகிருத்தியங்களைச் செய்யத்தகுதி யுள்ளவர்களாவார்களென்பது அநுபவ சித்தாந்தம். பெண்களுக்குப் போதிய வளவு கல்வியறிவும், நாகரீகமும் எற்படும் வரையில், புருஷர்களால் தனித்து எத்தகைய சீர்திருத்தமுஞ் செய்யமுடியாது. ஆகையால் பெண்களைப் பயிற்றுவிக்கவேண்டியது தற்கால சீர்திருத்தப் பிரசினைகளில் முக்கியமானவையாகும்.

---

# தருமம்.

மனிதர்கள் புத்திரப்பேற்றினல் மோக்ஷமடைந்துவிடலாமென்ற பிராந்தியால் புத்திரப்பேறுக்காகப் பஹீரதப் பிரயத்தினஞ்செய்கின்றனர். அது ஒரு வெட்கக்கேடான செய்தி. புத்திரரைப் பெற்றபின் அவர்களைப் போற்றவும், அவர்களைக் குபேரனக்கவும் வெகு பாடுபடுகின்றனர். மோசநாசஞ் செய்கின்றனர்.

இம்மையில், சக்கிரவர்த்தியின் நியாயஸ்தலங்களிலுங் கூட, தகப்பன்செய்த குற்றத்திற்கு விதிக்குந் தண்டனையை மகனனுபவித்துத் தகப்பனை விடுவிக்கலாமென்முல், அதை யொப்புக்கொள்ளமாட்டார்கள். அப்படிச்செய்யச் சட்டமுமில்லை. மனித நியாயாதிபதி பல காரணங்களால் பாரபக்ஷமாய் நடக்கக்கூடும். அப்படியிருந்தும், அவனவன் செய்த குற்றத்திற்கு அவனவனே உத்திரவாதியாக வேண்டியதாயிருக்கிறது.

கடவுளோ, பாரபக்ஷமற்றவர். துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ் செய்யும் மகா நியாயாதிபதி. அரசன் அன்று கேட்பான், தெய்வம் நின்றுகேட்கும்—என்ற உண்மைக்கிலக்கானவர். ஒவ்வோருயிர்களுள்ளிருந்தும், அவரவர்களின் உள்ளங்கவர் கள்வன். அவரை வஞ்சிக்கமுடியாது. அவரையொழித்தொரு காரியமும் மனிதராகிய நம்மாற்செய்ய முடியாது. அவர் சிபாரஸ்களைக் கேட்பவரல்ல. பரிதானம் வாங்குபவருமல்ல. ஆகையால், அவரவர்கள் செய்த பாவ புண்யங்களுக்குத் தக்க பலாபலன்களை யளிக்கக் காத்திருக்கிறார். அப்பேற்பட்ட நியாயத் தீர்ப்பு சமையங்களில், தெய்வ தெண்டனை வருவதாயிருப்பின், நம்மக்களால் அச்சமயம் யாதொரு உதவியுஞ் செய்யக் கூடியதில்லை. உதவி செய்யக் கூடு மென்பாருளரேல், அவர்கள் கடவுளுடைய நடுவு நிலைக்குப் பாதகங் கற்பிக்கிறவர்களேயாவர்.

ஆகையால், மனிதர் அவரவர்கள் செய்யுங் காரியங்கள் எவ்வளவு அற்பமாயிருந்த போதிலும் பகுத்தறிவு கொண்டு நன்மையிது தீமையிது என்று நிதானித்து நன்மைகளைச் செய்தும், தீமைகளுக்கு விலகி நடந்தும் வர வேண்டும்.

முக்கியமாக சகல ஜீவர்களிடத்திலும் ஜீவ காருண்யத்துடன் அன்பாய் நடக்கவேண்டும்.

எழைகளுக்கு, (அதாவது வேலை செய்து பிழைக்க வியலாத அசக்தர்கள், வியாதியஸ்த்தர்கள், இதுவரை வந்திராத பரதேசிகள்) அன்ன மிடல், வாசிப்பதற்கு வேண்டும் சௌகரியங்கள் திரவியங்களில்லாத மாணாக்கர்களுக்கு அவைகளைப் பூர்த்தி செய்தல், தண்ணீர்ப் பந்தல் எற்படுத்தல், கிணறு, குளம் வெட்டு வித்தல், சாலைகளுண்டு பண்ணல், சத்திரம், தங்கு மடம், ஆலயம், பிரசங்க மேடை முதலியவைகளைக் கட்டு வித்தல் முதலியவைகள் புண்யமாம்.

இவைகளைச் செய்யின் இவைகளெல்லாம் உயிர்க்குறுதியாய் நிற்கும். கடவுளுக்கும் பிரீதியுமாகும்.

"ஏழைகளுக்கு இறங்கு பவன் கடவுளுக்கே கடன் கொடுப்பவனாகின்றான்" என்பது ஒரு பழமொழி.

இந்த தர்ம புத்திரனை, நபுஞ்சகனுங்கூடப் பெற்றெடுக்கலாம். மரணத்தருவாயிலும் பெறலாம்.

மனித புத்திரனையோ, பிராயந்தவறினல் பெறுவது முடியாதகாரியம்.

ஆகையால் ஒவ்வொருவரும் இயன்ற தருமத்தை செய்திடலே தகுதி.

---

## மக்களை வளர்த்தல்.

உலகத்தில் மனிதர் அனுபவிக்கும் சம்பத்துகளில் புத்திர பாக்கியமு மொன்றாம். புத்திரர்களைப் பெறுவதிலும், அவர்களை வளர்

துத் முன்னுக்குக் கொண்டு வருவதிலும், பெற்றோர்களுக்குள்ள சிரமமும், கவலையும், செலவும் ஒரு அளவிட்டு சொல்லத்தரமன்று.

அவ்வளவு கஷ்ட நஷ்டங்களையும் பொருட் படுத்தாது வளர்த்து வாலிபஞ் செய்து முன்னுக்குக் கொண்டு வந்த பெற்றோர்களை, மக்களிற் பெரும்பாலர் அவமதிப்பதும், அவர்களைத் துன்புறுத்துவதும், இன்னும் அவர்கள் தேடிய பொருள்களைக் சூறையிடுவதும், அவர்கள் கீர்த்தியைக் கெடுப்பதும் வழக்கமாயிருக்கிறது. அது மஹா பாவமாகும்.

இவ்வுண்மையை மக்களறியாமலே பாழாய்ப் போகின்றார்கள். ஆகையால், பெற்றோர் மக்களைப் பெறுவதும் வளர்ப்பதும் ஒரு பெருங்காரியமல்ல. அவர்கள் தங்களிடத்திலே பய பக்தி விசுவாசமாயிருந்து வரும்படி, அவர்களைக் கண்டிப்புடனும் இராப் பகலாய்க் கவலையுடனும் சன்மார்க்கமான பிள்ளைகளாய் விளங்கப் பயிற்றுவித்துப் பாதுகாத்தலே தகுதி.

அப்படிச் செய்யா தொழியில், பெற்ருேர் களுக்கே சாஸ்வத சத்துருவாய், குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பாய், பாம்புக் குப் பால் வார்த்த கதையாய் முடியும். எச்ச ரிக்கை! எச்சரிக்கை!!

உள்ளன்பிருந்தாற் போதும். வெளியன்பு காட்டி மக்களையுங் கெடுத்து, நீங்களும் அவதி ப்படுவது மிகவும் பரிதாபம்! பரிதாபம்!!

---

## இராஜ விஸ்வாஸம்.

இராஜன் இகலோக கடவுளாவன். அவ னுக்கு இப்பதவி யொருவர் கொடுக்கக் கிடைப்ப தில்லை. கடவுளே நேரில் தெரிந் தெடுத்து நியமிக்கிருர். எனென்ருல் அவ ருடைய சிருஷ்டி, திதி, சம்ஹாரம் ஆகிய முத்தொழில் களில் சிருஷ்டித் தொழிலையும் சங்காரத் தொழிலையும் எகதேசத்திலும், திதி யாகிய (காத்தல்) சம்ரக்ஷிக்கும் தொழிலைப் பெரும்பாலும் நடத்தி வருவது அரசனின் கடமையாக விருக்கின்றது.

ஆகவே, இராஜனுக்குக் கீழ்படியாமை, அவனை அவமதிப்பது, அவனுக்குத்துரோகம் நினைப்பது முதலியவைகளெல்லாம் கடவுளுக்கே செய்த பிழை யாகும். அரசனுக் கடங்கி, அவனைப் புகழ்ந்து, அவனை விசுவாசிப்பது, கடவுளுக்கே செய்யும் வழிபாடாகும்.

ஆகையால், பகுத்தறிவுள்ள மனிதராகிய நாம், கடவுளுக்கு இரண்டாவதாக அரசனை வணங்க வேண்டும். இன்னும் விசேஷமாய்ச் சொல்ல வேண்டு மானால், அரசன் அன்று கேட்பான் தெய்வம் நின்று கேட்கும் என்றபடி, தெய்வத்தினும் அரசனே பிரத்தியக்ஷ தெய்வமாவான்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ் கதிய தெல்லா மரனுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

---

# விவாஹமான புதிய தம்பதி களுக்கு ஒரு கடிதம்.

சகோதரனே! சகோதரியே!

நீங்களிருவரும் வெவ்வேறு குடும்பத்திற் ஜெனித்தவர்கள். உங்கள் பெற்றோர்கள் உங்கள் விவாஹத்தை நிச்சயித்தார்கள். ஒருக்கால் உங்கள் சம்மதமு மறியப்பட்டோ கேட்கப் பட்டோ விருக்கலாம். ஆகிலும் விவாஹ விணைப்பானது கடவுளுடைய சித்தப்படி நடக்கின்ற தென்பதை நீங்களுணர வேண்டும்.

இப்பொழுது உங்கள் விவாஹம் நிறை வேறிவிட்டது. இருவருஞ்சேர்ந்து ஒரு குடும்பத்தை நடத்தவேண்டியவர்களாய் விட்டீர்கள். இனிமேல் நீங்கள் விவாஹத்துக்குமுன் நடந்துகொண்டதுபோல நடந்துகொள்ளக் கூடாது. மனுஷியத்தன்மையை யடைந்து விட்டீர்கள். இன்னும் இரண்டுமூன்று வரு

ஷங்களுக்குள் கடவுளுக்குச் சித்தமானல் இரண்டோர் குழந்தைகளுக்குப் பெற்ரோர்க ளாக ஆய்விடுவீர்கள்.

ஆகையால் இதுமுதல் குடும்பகாரியாதிக ளில், மிகக் கண்ணுங் கருத்துமாயிருந்து வர வேண்டும். வீட்டையும் வீட்டிலுள்ள சாமா ன்களையும் பத்திரமாயும், சுத்தமாயும் வைத்து வரவேண்டும்.

அவசிய மின்னது, அநாவசிய மின்னது என்ற முன் யோசனையுடன் சகலமுமாராய் ந்து செய்வதைச் செய்தும், செய்யத்தகாத தைச் செய்யாமலு மிருந்து காலங்கழிக்க வேண்டும்.

முக்கியமாக உங்கள் வருவாய்க்குத் தக்கபடி குடும்ப வரவு செலவுகளைத் திட்டஞ்செய்து அத்திட்டத்திற்குள்ளாகவே குடும்பச் செலவு களை நடத்திக்கொண்டு போகவேண்டும்.

வருவாயி லொருபாகத்தை (குறைந்தபக்ஷம் 5-ல் 1-பாகத்தை) மீத்துவைக்கப் பிரயாசைப்

படவேண்டும். அது உங்களுக்கு ஒரு வகை யான மனத்திருப்தியைத் தருவதோடு, வியா திப் படுங்காலம், வயோதிக்காலங்களுக்குதவக் கூடியதாயுமிருக்கும்.

வரவுக்குமிஞ்சிச் செலவு செய்வது அறி வீனமாகும். அது சகலவிதமான கேட்டுக்கும் வித்தாகும். கையிற் காசில்லையானால் கடன் வாங்கிச் செய்யவேண்டிய செலவை நிறுத்தி க்கொள்ளுதலே விவேகமாகும்.

உங்கள் பெற்றோர்களின் செல்வம் உங்க ளுக்கு எவ்வளவு வந்து வாய்த்திருந்தாலும் அல்லது அவர்கள் எவ்வளவு வரும்படி செய்ப வர்களாயிருந்தாலும், அதினால் உங்களுக்குச் சிறிதுங் கண்ணியமுண்டாவதில்லை.

“ உத்தியோகம் புருஷலக்ஷணம் ” என்ற படி புருஷன் எதாவது ஒரு சரியான தொழி ல்செய்து சம்பாதிப்பவனாயும், பெண் தன் புருஷனின் சொந்த சம்பாத்தியத்தை வைத் துக் குடும்பச்செலவுகளையும் தம்மனோபீஷ்

டங்களையும் மிக்க திட்ட வட்டத்துடன் நிறை வேற்றுபவளாயும் விளங்கவேண்டும்.

பிதுராஜிதங்களையே நம்பியிருத்தலும் ஸ்ரீதனங்களை எதிர்ப்பார்த்து அல்லது அடைந்தனுபவித்தலும், கேவலமான பிழைப்பேயாகும். அது மிகவு மபாயகரமான துங்கூட. ஏனெனில், காலகதியால் அவைகள் ஒருக்கால் உங்களை விட்டு நீங்கினுல் அச்சமயம் காலந் தள்ளுவது உங்களுக்கு மிகவும் பிரயாசையாக முடியும்.

ஆகையால், புருஷன் எவ்வளவு குபேரனுய் கல்விமானுயிருந்தாலும், தக்கவரும்படி செய்து ஜீவிக்கிறவனுயிருந்தால் மட்டும், அவனுக்கும் அவன் பெண்பிள்ளைகளுக்கும் மதிப்பாகும்.

ஒரு பெண் தன் தாய் வீட்டிலிருந்ததைப் பார்க்கிலும், புருஷன் வீட்டில் மாமன் மாமிகள் புகழும்படி நடந்து கொள்வதே விவேகமாகும். புருஷன் வீட்டிற்தான், பெண்களின் இயற்கைக்குணம் வெளியாகும்.

உங்கள் வீடு, அதிகாலை, நடுப்பகல், மாலை, இரவு இந்நான்கு வேளைகளிலும், மனைவி மக்களோடு கூடியிருந்து ஜெபஞ்செய்யும் கோவிலாய் விளக்கவேண்டும்.

நீங்களிருவரும்சேர்ந்தும் தனித்தும் செய், நினைத்த குற்றங்களையெல்லாம் அன்றன்று ஆராய்ந்து அதைக் கடவுளிடத்தில் அறிக்கையிட்டு, அத்தவறுதல்களுக்காக மன்னிக்க வேணுமாய்ப் பிரார்த்தித்தும் பிரார்த்தித்த வண்ணம் அத்தவறுதல்கள் இனி நடவாமலிருக்கத் தங்களைத் தாங்களே பாதுகாத்தும் வரவேண்டும்.

முக்கியமாகப் புருஷன் தன் பெற்றோர்களையே தெய்வமாகவும், பெண் தன் புருஷனையே தெய்வமாகவுங் கொண்டொழுகல் வேண்டும். அவ்வாறு நடப்பவர்க்கு கோயில் குளம் என்று போகவேண்டிய தவ்வளவு அவசிய மல்ல.

பெற்றோர்க்கேற்றபடி நடவாத புருஷனும் புருஷனுக்கேற்றபடி நடவாத பெண்ணும்

செய்யும் பூஜை, தவம், விரதம் முதலிய யாவும் பயன் தராவென்பது சத்தியம்.

உங்கள் சகல கிரியைகளும், முன் யோசனையுடன் நடத்தப்படுவதாயும், கடவுளை முந்நிட்டே துவக்குவதாயு மிருக்கட்டும்.

“ ஐயமிட்டுண் ” என்றபடி உங்கள் சக்திக்குத் தக்கபடி ஜீவகாருண்யத்துடன் தர்மம் செய்து வரவேண்டும். அதாவது வேலை செய்ய யியலாத அசத்தர்களே ஏழைகளாவார்கள். இது முன் வந்திராத பரதேசிகளே அதிதியாவார்கள். இவர்கள் எந்தச் சாதியாராயினும் எந்த மதத்தினராயினும் பாரபட்சமன்னியில் அன்புடனியன்றதை யளிக்கவேண்டும். பொருள் கொடுப்பதினும் அன்னமளிப்பது மஹா சிரேஷ்டமாகும்.

நீங்களிருவரும், தனியாகக் குடியிருக்க நேர்ந்தாலும், மாமன், மாமி, தகப்பன், தாயுள்ள வீட்டிற் குடித்தனஞ் செய்வதுபோலவும், அவர்களிருந்து வேலை வாங்குவதுபோல

வும், கண்டிப்பதுபோலவும் நினைத்து, அவ்வ ளவு பயபக்தியுடனும், திட்டவட்டத்துட னும், மரியாதையுடனும் குடும்பத்தை நட த்திவரவேண்டும்.

சோம்பியிருத்தல், சோம்பற் பேச்சுக்கள், அவதூறுகள், கோள் குண்டுணிகள், தூரப் பியாசங்கள், துன்மார்க்கங்கள், அசங்கியமான பேச்சுகள் முதலிய பழக்கவழக்கமுள்ளாரோடு நீங்கள் பழகக்கூடாது. அவர்கள் குருவா யிருந்தாலும் அவர்களுக்கு விலகி நடக்க வேண்டும். காமவிகாரங்கள் மூட்டுவதும், மனி தரின் நல்ல சுபாவங்களையும் சன்மார்க்கத்தை யுங் கெடுப்பனவுமாகிய **நாடகப் புத்தகங் களையும், நாவல் என்னும் கதைப் புத்த கங்களையும் நீங்களிருவரும் கையாடவா வது, வாசிக்கவாவது கூடாது.**

சுருக்கச் சொல்லவேண்டுமானல், உங்களி ருவரையும் நீங்கள் நடத்தும் குடும்பபரிபால னத்தையுங் கண்டு மற்றேரும் ஆசையுடன்

பின்பற்றும்படி அவ்வளவு மேன்மையாய் நடந்துகொள்ளவேண்டும்.

உங்களிருவரில் ஒருவரைப் பார்க்கினு மற்ருெருவர் செல்வத்திலாவது, கல்வியறிவிலாவது, அழகிலாவது மேம்பட்டிருக்கலாம். அதை யுத்தேசித்து ஒருவரையொருவர் அவமதிப்பதும், கேவலமாய் அல்லது கொடூரமாய் நடத்துவதும் பாபமாம்.

மரணம் உங்களிருவரையும பிரிக்கும்வரை உடலிரண்டும் உயிர் ஒன்றுமாக நீங்கள் அவ்வளவு ஐக்கியபத்தியத்துடன் வாழக் கடவுளைப் பிரார்த்திக்கிருேம்.

மனைவி நீடித்தவியாதியாக விருக்கிருளென்ருவது, அவளுக்கு கற்போற்பத்தியுண்டாகவில்லையென்ருவது, மறு விவாஹஞ்செய்தலும், அதுபோல புருஷன் வருவாயில்லாதவனென்ருவது தன் புருஷன் கடுமையாய் நடத்துகின்ருனென்ருவது தரித்திரனுனென்ருவது, தாய்வீட்டிற் றாமதித்தலும் அறிவீனமாகும்.

விவாஹ சம்பந்தமானது, சரீர சம்பந்தத்துக்காகவேயென சில தம்பதிகள் யௌவன பருவத்தில் நினைப்பதுண்டு. அதினால் பல விதரோகங்களுக்குள் அகப்பட்டு நசுங்குவதுமுண்டு. அது தவறு. விவாஹமுறையானது சிருஷ்டிப்புக்கோர் மார்க்கமாய் எம்பெருமான் கைக்கொண்டிருப்பதோடு, நிதியாகிய அவருடைய படைப்புகளையெல்லாம் எளிதில் ரட்சிக்கச்செய்த வுபாயமுமாகும்.

ஆகையால், இல்லற தர்மத்தை நடத்த ஒருவரையொருவர் துணையாகக்கொண்டு எவ்விஷயத்திலும் நிதான புத்தியுடன் நடந்து வரவேண்டியதே விவேஹமாகும்.

அவரவர்செய்யும் பழி பாவங்களுக்கு அவரவரே உத்திரவாதிகளானபடியாலும், மனித புத்திரர்களால், அவர்கள்செய்கிற ஸ்ரார்த்தாதி கருமங்களால்மட்டும் பெற்றோர்களின் பாவம் மன்னிக்கப்படமாட்டா. ஆகையால், "ஜீவகாருண்யம்," "தர்மம்" என்னும்

புத்திரர்களை ஒவ்வொருவரும் பெற்றெடுத்து வளர்த்து வரவேண்டும். அவைகளே உங்களுயிர்க்கு உறுதிசெய்யும் மக்களாகும்.

மனிதபுத்திரர், பெற்றோரின் செல்வத்தையும், புகழையுங் விர்த்திசெய்வதிற்குப் பதிலாகப் பெரும்பாலுங் கெடுக்கவே காண்கின்றோம். அப்பேற்பட்ட புத்திரரைப் பெற்றெடுப்பதிலும் பிரயாசை மிக விருக்கிறது. அவர்களால் உயிருக்குறுதியுமில்லை. ஆகையால் உங்களுக்கு புத்திரதாகமில்லா திருக்கவேணும்.

கடவுளுக்குச் சித்தமானல், புத்திரபாக்கியத்தை யருளுவார். அப்பொழுது லோகாசாரப்படி அச்சந்தோஷத்தையும் அடைந்து அநுபவியுங்கள்.

புதிய தம்பதிகளுக்கு ஒருகடிதம் முற்றிற்று.

திருசிற்றம்பலம்.

---

## ஸ்ரீ நெல்லையப்பர் ஸ்ரீ காந்திமதியம்பாள் ஆலய ஜீர்ணோத்தாரண வரவு செலவு கணக்கு.

| ஆண்டு. | விபரம். | வரவு. ரூ. | அ. | ப. | ஆண்டு. | விபரம். | செலவு. ரூ. | அ. | ப. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1087 | வசூல் ரொக்கம் | 1,895 | 14 | 2 | 1087 | செலவு | 1,677 | 3 | 10 |
| 1088 | ஷை | 1,265 | 4 | 10 | 1088 | ஷை ... | 398 | 6 | 3 |
| 1089 | ஷை | 6,834 | 1 | 3 | 1089 | ஷை ... | 5,057 | 1 | 4 |
| 1090 | ஷை | 6,890 | 11 | 10 | 1090 | ஷை ... | 9,792 | 3 | 5 |
| ஷை | கடன்வரவுகணக்குப்படி. ... | 289 | 15 | 4 | | | | | |
| | ஆகவரவு ரூ. ... | 17175 | 15 | 5 | ... | ஆக சிலவு ரூ. | 16924 | 14 | 10 |
| | | | | | | கையிருப்பு... | 251 | 0 | 7 |

1091-ம் ஞு வைகாசிமீ 1உ. } E. & O. E. சிவசூரிய சுவாமிகள், திருப்பணிக் கைங்கரியம்.